# பகவத் பாதை




## Bagavath Path

இது ஒரு பகவத் மிஷன் வெளியீடு

பாதை - 1 | 2012 / ஜூலை | மலர் - 10

தனிச்சுற்றுக்கு மட்டும்



Sri Bagavath

விடுதலை என்பது எதையோ ஒரு நிலையை அடைவதல்ல. இயங்குகின்ற நமது மனது எந்த நிர்ப்பந்தமும் இல்லாமல் - அதாவது அடைய வேண்டியது, அடைய வேண்டாதது என்ற எந்த நிர்ப்பந்தமும் இல்லாமல் - இயல்பாக ஓடி மறைவதே விடுதலையாகும்.

– ஸ்ரீ பகவத்



# மனம், புத்தி, சித்தம், அகங்காரம்

- ஸ்ரீ பகவத்

மனம் என்பதுதான் நாம் புரிந்துகொள்ள வேண்டிய முக்கியமான ஒன்று.

மனம் செம்மையானால் போதும்; மனதைச் செம்மைப்படுத்தும் வழியே சிறந்த வழி.

மனம் என்றால் என்ன?

மனதை அந்தக்கரணம் எனக்கூறுகின்றனர். அந்தக்கரணம் என்பது மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என நான்கு பகுதியாகப் பிரிக்கப்படுகிறது. இந்த நான்கையும் சேர்த்து அந்தக்கரணம் என்றும் கூறுகின்றனர், மனம் என்றும் கூறுகின்றனர்.

இதனை நான்காகப் பிரித்துப் பார்க்கும்போது, இதில் நான்கில் ஒரு பகுதியையே மனம் என்னும் வார்த்தை குறிக்கிறது.

ஆன்மீக நூலோருக்கு குழப்பத்தைத் தீர்ப்பதைவிட குழப்பத்தை ஏற்படுத்துவதில் மகிழ்ச்சி அதிகம் போலும்!

மனமற்றநிலை - மனமற்றநிலை என்று பலரும் விவரிக்கின்றனர். மனம் அடங்கிய நிலை என்று கூறுகின்றனர். அது இந்த அந்தக்கரணமே இல்லாத நிலையைக் குறிக்கவில்லை. அந்தக்கரணத்தின் நான்கு பகுதிகளில் ஒரு பகுதியான மனதை மட்டுமே குறிக்கிறது. அது நான்கில் ஒரு பகுதியை மட்டுமே குறிப்பிடுகின்றது. மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பது எதனைக் குறிக்கின்றது?

இதில் முதல் பகுதி மனம்.

இந்த மனம் என்றால் என்ன என்பதை எவருக்கும் விவரிக்கத் தேவையில்லை. இதைப்பற்றி அனைவருக்கும் தெள்ளத்தெளிவாகத் தெரியும். அதனால்தான் மனம் ஒரு குரங்கு என்று கூறுகிறோம். அது ஒரு இடத்தில் அமைதியாக இருக்காது. அங்குமிங்கும் தாவிக்கொண்டிருக்கும். இப்படி அலைபாயும் தன்மையுடைய பகுதியை மனம் எனும் பெயரிட்டு அழைக்கிறோம்.

நாம் வெளியூருக்குச் செல்லவேண்டிய அவசியம் ஏற்படுகிறது. எந்த வாகனத்தில் செல்லுவது, எங்கே தங்குவது, எவரையெல்லாம் பார்ப்பது என்பது சம்பந்தமான எண்ணங்கள் நமக்கு ஏற்படுகின்றன. சில எண்ணங்கள் தாமாக ஏற்படுகின்றன. சில எண்ணங்களை நாமாக ஏற்படுத்துகின்றோம். பலவிதமான செய்திகளையும் கொடுக்கும் பகுதியாக உள்ளது தான் இந்த மனம். பலவற்றையும் காட்டுவது தான் இந்தப் பகுதி. ஒன்றை மட்டும் காட்டினால், அதில் நாம் ஆய்வு செய்து தேர்ந்தெடுப்பதற்கு எதுவுமே இல்லாமல் போய்விடும்.

நான்கு விதமான விடுதிகளைப்பற்றிய செய்தி கிடைத்தால்தான், அதில் எந்த விடுதியில் தங்குவது என்பதைத் தேர்ந்தெடுக்கலாம். இப்படிப் பலவிதமான செய்திகளைக் கொடுப்பதுதான் மனம். இப்படிப் பலவிதமாகக் கொடுக்கப்பட்ட செய்திகளைத் தரம்பிரித்து நமக்குத் தேவையான ஒன்றைமட்டும் தேர்ந்தெடுப்பதுதான் புத்தி. மனம் போன போக்கெல்லாம் போகவேண்டாம் என்பது முதுமொழி. மனம் காட்டியதை எல்லாம் புத்தி அங்கீகரிக்க ஆரம்பித்தால், புத்தியும் மனதின் தகுதிக்கு வந்துவிடும்.

பலவற்றையும் காட்டுவது மனது.

தீர்மானம் செய்வது புத்தி

சித்தம் என்பது என்ன?

சித்தம் என்பது நமது இயல்பு. ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விதமான இயல்பு உண்டு. இயல்புக்கேற்ற அனுபவங்கள் தாம் ஒருவருக்கு ஏற்படும். நம்முடைய இயல்புகள் அனைத்தும் தங்கியிருக்கும் பகுதிதான் நமது சித்தம்.

நமது சித்தம் என்பது ஒரு சேமிப்புக் கிடங்கு. நமது இயல்புகளெல்லாம் அங்கே சேமிக்கப்பட்டிருக்கின்றன. நமது இயல்புகள் அனைத்தும் ஒரே சமயத்தில் வெளிப்பட்டு விடுவதில்லை. ஒவ்வொரு சந்தர்ப்பத்தில், ஒவ்வொரு விதமான இயல்பு வெளிப்படுகிறது; ஒவ்வொரு வித அனுபவமாக வெளிப்படுகிறது.

நம்முடைய சித்தம் நேரடியாகச் செயலில் ஈடுபடுவதில்லை. சித்தத்தின் மூலம் செயல்படுவது, நமது மனமும் புத்தியும் மட்டுமே. சித்தத்தின் தன்மையுடன் நாம் செயல்பட்டாலும் நாம் செயல்படுவது, நமது மனது மற்றும் புத்தியின் உதவியினால் மட்டுமே.

அடுத்தபகுதி தான் அகங்காரம். இந்த அகங்காரம் என்பது, பலராலும் பழிக்கப்படுகிறது. அகங்காரம் என்பது ஒரு திமிர்பிடித்த மனோபாவமாகக் கருதப்படுகிறது. அகங்காரம் என்பது ஆணவம் எனக்கருதப்படுகிறது. அப்படிக் கருதுவதனால், நாம் அதன் அடிப்படை உண்மையைத் தரிசிக்கத் தவறிவிடுகிறோம்.

உண்மையில் அகங்காரம் என்பது தான் நமது உணர்வுநிலை. அதுதான் Consciousness. அதுதான் நமது அந்தக் கரணத்தின் உயிர்த்தன்மை.

மனம், புத்தி, சித்தம் ஆகியவற்றுக்கு உயிர் கொடுப்பதுதான் இந்த அகங்காரம். நமது சுத்தமான உணர்வு நிலைதான் அகங்காரம். ஆணவம் என்பது வேறு, இங்கு அகங்காரம் எனக் குறிப்பிடுவது வேறு. ஆணவம் என்பது தன்னைப்பற்றிய ஒரு எண்ணம். அகங்காரம் என்பது ஒரு சுத்தமான உணர்வுநிலை. அகங்காரத்தின் உயிர்த்தன்மையை எடுத்துக்கொண்டுதான், மனம், புத்தி, ஆகியவை உயிர்பெறுகின்றன; செயல்படுகின்றன.

நமது சித்தத்திலிருந்து வெளிப்படும் அத்தனை அனுபவங்களும், இந்த அகங்காரத்தின் மூலமாகவே அனுபவமாகின்றன. இருப்புத்தன்மை என்பது உணர்வுநிலை, ஒரு Conscious நிலை. அதுதான் இந்த அகங்காரம்.

ஒரு ஹார்மோனியப் பெட்டியில் எத்தனையோ பட்டன்கள் இருக்கின்றன. அந்த பட்டன்களைத் தாறுமாறாக அழுத்தினால் தாறுமாறான சப்தம் ஏற்படும். முறையாக அழுத்தினால், முறையான இசை ஏற்படும். எப்படி வேண்டுமானலும், இங்கும் அங்கும் அழுத்துவது மனதின் செயல்பாடு. முறையாக பட்டன்களை அழுத்துவதுதான் புத்தியின் செயல்பாடு.

ஹார்மோனியப்பெட்டிதான் நமது சித்தம். அதுதான் நமது இயல்பு. ஹார்மோனியப் பெட்டியில், வீணை இசையோ, நாதஸ்வர இசையோ வராது. இசைக் கருவிக்கு ஏற்ற இசைதான் ஏற்படும்.

இசை என்பதுதான் அகங்காரம். இசை ஏற்படவில்லையென்றால், இசைக்கருவி பயனற்றது; பட்டனை அழுத்துவதும் பயனற்றது. இசைதான் உயிர்த்தன்மை. இசைதான் உணர்வுத்தன்மை; இசைதான்அனுபவம்.

எல்லா அனுபவங்களுமே அகங்காரத்தின் வெளிப்பாடுகள் தாம்.

மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பது நமக்குள் எப்படி செயல்படுகிறது என்பதற்கு இன்னுமோர் உதாரணத்தைப் பார்ப்போம்.

நம்மில் பலர், தீய பழக்கங்களுக்கு அடிமையாகி, அதிலிருந்து விடுபடமுடியாமல் தவிக்கின்றனர். அவர்களுடைய இயக்கம் எப்படி அமைந்துள்ளது? அவர்களுடைய இயக்கத்திற்கு அந்தக்கரணமே காரணம், அவர்களுடைய மனம், புத்தி, சித்தம், அகங்காரமே காரணம். அவர்களிடம் இவை எவ்வாறு செயல்படுகின்றன? எவ்வாறு அவர்களை அடிமைப்படுத்துகின்றன?

ஓர் உதாரணத்திற்காக, மதுப்பழக்கத்திற்கு அடிமையாகிக் கிடக்கும் ஒருவரை எடுத்துக்கொள்வோம். மது, மாது, லாகிரி வஸ்துக்கள் என்று எவற்றை வேண்டுமானாலும் எடுத்துக்கொள்ளலாம். இவை மட்டுமல்ல; எடுத்ததற்கெல்லாம் பயப்படுவது, எடுத்ததற்கெல்லாம் கோபப்படுவது, எடுத்ததற்கெல்லாம் வருத்தப்படுவது, தாழ்வு மனப்பான்மை என அனைத்தையுமே எடுத்துக்கொள்ளலாம். இவை அனைத்தின் பிரதிநிதியாக மதுப்பழக்கத்திற்கு அடிமையான ஒருவரின் செயல்பாடு எப்படி இருக்கிறது என்பதை ஆய்வுக்கு எடுத்துக்கொள்வோம்.

எல்லாப் பிரச்சினைகளுக்கும் ஆணிவேர் ஒன்றுதான். இந்த ஆணிவேரைப் புரிந்துகொண்டு, அதிலிருந்து விடுபட்டால், எல்லா பிரச்சினைகளும் தீர்வு பெற்றுவிடுகின்றன. ஒவ்வொரு பிரச்சினைக்கும் ஒவ்வொரு விதமான தனித்தனி வேர் எதுவும் கிடையாது. ஆகவே ஒரு பிரச்சினையின் செயல்பாட்டைப் பார்த்தால் போதும். பெயர்தான் வேறு வேறாக இருக்கிறதே தவிர, பிரச்சினையின் அடிப்படை அம்சம் ஒன்றுதான் - அணுகுமுறை அம்சம் ஒன்றுதான்.

நாம் போதைக்கு அடிமைப்பட்டிருப்பதாக வைத்துக்கொள்வோம். இங்கு என்ன நிகழுகின்றது? மதுவை இரசித்து மகிழ்ச்சியோடு இருப்பவர்களை நாம் இங்கு ஆய்வு செய்யவில்லை. மதுப்பழக்கத்திலிருந்து விடுபட நினைத்தும் முடியாமலிருப்பவர்களைப் பற்றிதான் இங்கு ஆய்வு செய்கிறோம்.

மதுப்பழக்கத்திற்கு அடிமையான நாம் அதனுடைய தீய விளைவைப் புரிந்துகொண்டு அதனை சில நாட்கள் நிறுத்தி, கட்டுப்பாடாக இருக்கின்றோம்.

ஒருநாள் தற்செயலாக இன்னுமொருவர் குடிப்பதைப் பார்க்கிறோம். அல்லது நண்பர் ஒருவர், தன்னுடைய மதுப்பார்ட்டியில் கலந்துகொள்ள அழைக்கிறார்.

நமது மனம், 'நாம் குடித்து சில நாட்கள் ஆகிவிட்டன. இன்று மட்டும் குடித்துக் கொள்ளலாமே' என்று கூறுகிறது. அதுவே பிறகு இப்படிச் சொல்லுகிறது 'குடிப்பழக்கம் ஆபத்து; இன்று குடித்துவிட்டால், அது நம்மைத் தொற்றிக்கொள்ளும்; அதனால் குடிக்கக்கூடாது'.

இந்நிலையில் நண்பர் மீண்டும் கூப்பிடுகிறார். நாம் ஏதாவது ஒரு முடிவு எடுத்தாக வேண்டும். இப்போது நமது புத்தி செயலுக்கு வருகிறது.

"குடித்தால் அந்த அனுபவம் எப்படி இருக்கும்?" என புத்தி கேள்வியை எழுப்புகிறது. மனம் எழுப்பும் கேள்வி மேம்போக்கானது. ஆனால் புத்தி எழுப்பும் கேள்வி ஆழமானது; செயல் வடிவிலானது.

"குடித்தால் அந்த அனுபவம் எப்படி இருக்கும்?" என அது கேள்வி எழுப்பியதும், குடிக்கும்போது ஏற்பட்ட அனுபவத்தை மீண்டும் நமது மனதுக்குள் கொண்டு வருகிறோம். அதனை நமக்குள் Visualize செய்து பார்க்கிறோம். அதனை நமக்குள் இவ்வாறு உணர்ந்து கற்பிதம் செய்யும்போது, ஹார்மோனியப் பெட்டி இயங்க ஆரம்பித்து இசையை ஏற்படுத்த ஆரம்பிக்கின்றது.

மது அருந்திய அனுபவத்தை நமக்குள் உணர்ந்து பார்க்கும்போது, நமது உடலின் நரம்பு மண்டலம் கிளர்ந்தெழ ஆரம்பிக்கின்றது.

இப்போது மதுவின் தேவை, நமது மனதின் தேவையாக மட்டும் இல்லாமல், நமது உடலின் தேவையாகவும் மாறிவிடுகிறது.

மனது மீண்டும் கூறுகிறது. "இன்று மட்டும் மதுவை எடுத்துக்கொள்ளலாம்"

பிறகு அதுவே மீண்டும், "மதுப்பழக்கம் ஆபத்து" என எச்சரிக்கிறது.

மனம் இரண்டு பக்கமும் பேசுகிறது. உடலின் தேவை - உடலின் கிளர்ச்சி, முதலாவது நிலையோடு சேர்ந்து மதுவைக்கோருகிறது.

இப்போது, புத்தியும், உடலின் கிளர்ச்சியை ஏற்றுக்கொண்டு, மதுவை இன்றுமட்டும் அருந்திக் கொள்ளலாம் என்ற முடிவுக்கு வருகிறது.

உடல் உணர்வு கிளர்ந்து எழுந்த நிலையில், அதிலிருந்து விடுபடவேண்டுமானால் அடக்குமுறைதான் தேவைப்படுகிறது. அடக்க நினைத்தால், அந்த உணர்வு மேலும் பெரிதாகி விடுகின்றது.

உண்மையில், நமது புத்தி தனது முதலாவது நடவடிக்கையின்போதே, 'இன்று மட்டும் குடித்தால் அந்த அனுபவம் எப்படி இருக்கும்?' என்று உணர்வைக் கையில் எடுத்துக்கொண்டு, மதுவின் இன்பத்தைத் தனக்குள் கற்பிதம் செய்யாமல் இருந்திருக்கும் பட்சத்தில்,

இது நமது நரம்பு மண்டலத்தை எட்டாது.

நம் மனதில் ஏற்படும் எண்ணங்கள் எவையும் நமது நரம்பு மண்டலத்தை இயக்காது. அவை வெறும் Suggestion மட்டுமே. ஆனால் நமது புத்தி கூறுவது அனைத்தும் முடிவுகளாகும்; தீர்மானங்களாகும். அது கூறுவனவற்றையே நமது நரம்பு மண்டலம் ஏற்றுக்கொள்ளும். எனவே புத்தியின் முடிவுகள் மட்டுமே செயலுக்கு வரும்.

நமது புத்திதான் நமது மதுப்பழக்கத்துக்குச் சாதகமாக, 'இன்று மட்டும் குடித்தால் அந்த அனுபவம் எப்படி இருக்கும்?' என்று அதனை Visualize செய்வதன் மூலமே நரம்பு மண்டலம் செயல்பட ஆரம்பித்துவிடுகிறது.

நமது மனதின் செயல்பாடு மட்டும் இருக்கும் போது உணர்வுகளும் ஏற்படுவதில்லை; அடக்கவேண்டிய அவசியமும் ஏற்படுவதில்லை.

நாமாக அனுமதி கொடுத்த நிலையில் தான் நமது பழக்கங்கள் உயிர் பெறுகின்றன.

நாம் உயிர் கொடுக்காத நிலையில் நாம் எதனையும் அடக்கத் தேவையில்லை.

இப்படித்தான் ஏதோ ஒரு சூழ்நிலையில் நம்மையறியாமல் கோபமோ, பயமோ ஏற்படுகின்றது.

அந்நிலையில் நமது புத்தி கோபத்தையோ, பயத்தையோ, நியாயப்படுத்தும்போதோ அல்லது அதிலிருந்து விடுபட நினைக்கும்போதோ, அந்த உணர்வுகள் நமக்குள் நிலைபெறுகின்றன.

இல்லாவிடில் தாமாக வந்த உணர்வுகள் யாவும், தாமாக மறைந்து விடுகின்றன.

மனம் என்பது, வெறும் நினைவே. அது செயலோடு தொடர்புடையதன்று. புத்தி மட்டுமே செயலோடு தொடர்புடையது.

மனம் எங்குவேண்டுமானாலும் போகட்டும்.

புத்தியில் மட்டும் நிதானம் இருந்தால் போதும். சரியான செயலை மட்டும் தேர்வு செய்யும் நிலையில்,

எந்தத் தீய பழக்கமாயினும் சரி,

பயம், கோபம், துயரம், தாழ்வு மனப்பான்மை போன்ற எந்த உணர்வுகளானாலும் சரி,

அவற்றால் நம்மை ஆட்டிப்படைக்க முடியாது. தாழ்வு மனப்பான்மையுள்ள பலர் தோல்வி பற்றிய மனதின் எண்ணத்தை புத்தி எடுத்துக்கொண்டு அதை Visualize பண்ணுவதாலேயே தாழ்வு மனப்பான்மையால் பாதிக்கப்படுகின்றனர்.

நமது கருத்துகளில் தெளிவுபெற்ற பலர் மனோரீதியான விடுதலை உணர்வையும் அனுபவிக்கின்றனர், சிறிது காலத்திற்குப் பிறகு தங்களுக்கு ஏற்பட்ட பிரச்சினைகளை மீண்டும் சந்திக்கும்போது, "நமக்கு ஏற்பட்ட தெளிவு சரியானதுதானா? அல்லது இன்னும் சற்று ஆழமாகப் புரிந்து கொள்ளவேண்டுமோ?" -எனச் சற்றுக் குழப்பமடைந்து விடுகின்றனர்.

இங்கு இவர்களுக்கு என்ன நேர்ந்திருக்கின்றது?

'இந்தியாவின் வடபகுதியில் இமயமலை இருக்கிறது' என ஒருவர் கூறுகிறார். அதைப் பற்றி நமக்குத் தெரியாது. ஆனாலும் அவர் பொய் கூறுவதற்குச் சாத்தியமில்லை என எண்ணி அவரது வார்த்தையை ஏற்றுக் கொள்கிறோம்.

- இது தான் நம்பிக்கை.

நம்பிக்கையை ஆதாரமாகக் கொண்டு ஒரு முடிவுக்கு வருகின்றோம். முடிவுக்கு வருவதென்றால், அதற்குப் பிறகு அதுபற்றிய எந்த ஆய்வையும் மேற்கொள்வதில்லை.

இதுபோல் 'இந்தியாவின் வடபகுதியில் இமயமலை இருக்கிறது' என்பதை சிலர் நம்பிவிடுவதில்லை. அப்படி நம்பாத பட்சத்தில் நாம் பலவழிகளிலும் விசாரிக்கிறோம். நமக்குத் திருப்தியளிக்கும் வகையிலெல்லாம் விசாரித்து ஆய்வு செய்கிறோம். அப்படி ஆய்வு செய்து முடித்த நிலையில், "இந்தியாவின் வடபகுதியில் தான் இமயமலை இருக்கிறது" என நாம் நமது ஆய்வை முடித்துக்கொள்கிறோம்.

ஆய்வை முடித்தநிலையில், நாம் இமயமலையை அடைய விரும்பினால் இமயமலையை நோக்கிப் பயணம் செய்ய ஆரம்பித்துவிடுகிறோம்.

அதற்குப் பிறகு 'இமயமலை எங்கே இருக்கிறது' என்று விசாரித்துக் கொண்டிருப்பதில்லை.

செயலில் இறங்கிய பிறகு விசாரிக்க ஆரம்பித்தால், செயலில் தடங்கல் ஏற்பட்டுவிடும்.

ஆய்வு எதுவுமே செய்யாமல் மூடநம்பிக்கையுடன் ஒரு முடிவுக்கு வருவதற்கும்,

அறிவு பூர்வமாக ஒரு முடிவுக்கு வருவதற்கும் எந்த வித்தியாசமும் இல்லை.

முடிவுக்கு வருவதுதான் முக்கியம். முடிவுதான் செயல்களைக் கொண்டுவரும்.

முடிவுக்கு வராமல் கேள்விகளையே மீண்டும் மீண்டும் எழுப்புவது என்பது தான் மனோ இயக்கம்.

முடிவுக்கு வந்து, முடிவைக் கொண்டு செயல்படுவதுதான் புத்தியின் இயக்கம்.

"நமக்குள், தாமாக ஏற்படும் உணர்வுகள் யாவும், தாமாகவே சீராகிவிடும்; அவற்றைச் சீரமைக்க நாம் எந்த முயற்சியையும் செய்திடத் தேவையில்லை" என்று,

நாம் அறிவுப்பூர்வமான முடிவுக்கு வந்த பிறகு,

அதுவே நமது புத்தியின் செயலாக இருந்து நமது செயல்களை நிர்வாகம் செய்துவிடும். நாம் மீண்டும் பிரச்சினையான உணர்வுகளைச் சந்திக்கும்போது 'நாம் செய்வதற்கு வேறு ஏதாவது உள்ளதா?' என்று குழம்பிக் கொள்வோமேயானால்,

நாம் நமது புத்தியை இழந்து, மீண்டும் மனோ அம்சத்திற்கு மாறிவிடுகிறோம்.

"எல்லாவற்றையும் இறைவன் பார்த்துக்கொள்வான்; எனக்கு எந்தப் பொறுப்பும் கிடையாது" என, நம்பிக்கையின் அடிப்படையில் நமது மனதை தாமாக இயங்க அனுமதிக்கும் போதும்,

- புத்தியின் அம்சத்துடன்தான் நாம் செயல்படுகிறோம்.

எல்லாப் பொறுப்புகளையும் இறைவனிடம் ஒப்படைத்த நிலையிலும், நமக்கு மனோரீதியாகப் பிரச்சினை ஏற்படும் சமயத்தில், "இறைவன் என்னைக் கைவிட்டுவிட்டானே" என நாம் எண்ண ஆரம்பித்தோமானால்,

- நாம் புத்தியின் செயல்பாட்டிலிருந்து இறங்கி, மனதினுடைய செயல்பாட்டுக்கு வந்துவிடுகிறோம்.

இதனால்தான், "நாம் புரிந்து கொண்டால் மட்டும் போதாது; நாம்புரிந்து கொண்டோம் என்பதையும் புரிந்துகொள்ளவேண்டும்"

- என நாம் கூறுகின்றோம்.

நமது புரிதலை அத்துடன் முடித்துக் கொள்ளவேண்டும். அதற்குப் பிறகு நாம் அதனை மீண்டும் மீண்டும் ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளக்கூடாது.

நம்முடைய முடிவில் நாமே விசுவாசத்துடன் இருப்பது தான்,

- Confirmation

- இதுதான் புரிந்ததை உறுதி செய்வது.

- இதுதான் தெளிவு முடிச்சு

- இதுதான் புத்தியின் இயக்கம்.

'நாம் சரியாகப் புரிந்து கொள்ளவில்லையோ?' என்று நம் மனம் கூறினாலும் அதனை நாம் நமது மனதின் இயக்கமாக மட்டும் எடுத்துக்கொள்ளவேண்டும். அந்தக் கேள்வியை நமது புத்தி கேட்கக்கூடாது.

சித்தம் மற்றும் அகங்காரம் என்பவை நமது அந்தக்கரணத்தின் அடித்தளமாக இருந்தாலும், அவற்றைக் குறித்து, நாம் எதுவும் செய்யத்தேவையில்லை.

மனம் - புத்தி இவற்றை நாம் சரிவரப் புரிந்து கொண்டநிலையில்,

நமது புரிதலில் - முடிவில் உறுதி பெற்றநிலையில்,

- நமது இயல்பிலுங்கூட, தேவையான மாற்றங்கள் தாமாக ஏற்படுகின்றன.



## ஐயாவுடைய நிகழ்ச்சி

| நாள் | நிகழ்ச்சி நடைபெறும் இடம் | பொருள் | நிகழ்ச்சி ஒருங்கிணைப்பாளர் |
|---|---|---|---|
| 29-07-2012 ஞாயிறு | மைலாப்பூர் ஃபைன் ஆர்ட்ஸ் கிளப் மைலாப்பூர், சென்னை. | **ஞானத்தின் ரகசியம்** மாலை 5-30 to 8-30 மணிவரை | திரு. **A.B.N.** செல்வராஜ் - 9789999333, 9710999333 |

**சென்னையில் ஐயாவைச் சந்திக்கும் முகவரி :**

**ஸ்ரீ பகவத்,** கதவு எண். பழைய எண். 107, (புதிய எண் : 77) நித்தியானந்தம் தெரு, வாசுதேவன் நகர், (காசி தியேட்டர் அருகில்), ஜாபர்கான்பேட்டை, (அசோக் நகர்), சென்னை-600083. செல் : 99442-15677

## ?கேள்வி பதில்

**கேள்வி :** தியானம் என்றால் என்ன? தியானம் ஏன் செய்ய வேண்டும்? தியானத்தின் பயன் என்ன? தியானத்தின் இயலாமை என்ன?

**பதில் :** தியானம் என்பது மனதிற்கு ஓர்மை (Concentration) ஏற்படுத்தும் பயிற்சி முறையே ஆகும். ஓர்மை (Concentration) ஏற்பட்ட மனதினால் நாம் எந்த வேலையைச் செய்கிறோமோ அந்த வேலையாகவே மாறிவிடும் நிலை ஏற்படும்.

நாம் ஒரு செயலில் ஈடுபடும் போது நமது மனம், அந்த ஒரு செயலில் மட்டும் நில்லாமல், நமக்குத் தேவையில்லாத பலவற்றைப் பற்றி நினைத்துக்கொண்டு, அந்தச் செயலை முழுமையாகச் செய்ய முடியாமல் மனம் அலைபாய்ந்து கொண்டே இருப்பதால் நம்மால் எந்தச் செயலையும் முழுமையாகச் செய்ய முடிவதில்லை. செயலை முழுமையாகச் செய்வதற்கு ஓர்மையுடைய மனம் வேண்டும்.

மன ஓர்மை ஏற்பட்டுச் செய்யக் கூடிய செயல்கள் அனைத்தும் பன்முகத் தன்மையற்று, ஓர்மையுடைய அந்தச் செயலாகவே மாறிவிடும். இப்படிச் செயல்களை முழுக் கவனத்துடன், விழிப்புடன் செய்வதற்கான மன ஓர்மைப் பயிற்சி முறை தான் தியானம்.

நமது புற வாழ்க்கை முழுவதும் செயல்களால் உருவாக்கப்பட்டது. நமது வாழ்வில் நல்ல முறையில் முழு கவனத்துடன் செயல்களில் ஈடுபடுவதால் மட்டுமே வாழ்க்கை வளங்கள் அத்தனையையும் பெறமுடியும். முழுக்கவனத்துடன் செயல்களில் ஈடுபடுபவர்களைத் தான் கர்ம யோகி என்று கூறுவார்கள். அதாவது எந்தச் செயலை செய்கிறோமோ அதுவாகவே நாம் மாறிவிடுவது ஆகும். புற வாழ்வில் உயர்வடைவதற்கு, நல்ல வாழ்க்கை அமைத்துக் கொள்வதற்கு, தொழில் துறையில் முன்னேற்றம் அடைவதற்கு என எல்லாவற்றிற்கும் முழுமையான கவனத்துடன் செயல்களைச் செய்வதன் மூலம் மட்டுமே உயர்வு அடைய முடியும்.

நமது புற வாழ்வு சிறக்க, நிறைவான வாழ்க்கை வாழ ‘மன ஓர்மை’ப் பயிற்சி முறையே தியானம் ஆகும். நாம் நம்முடைய நடைமுறை வாழ்வில், தூங்கும் போது தூங்குவது இல்லை; குளிக்கும் போது குளிப்பது இல்லை; சாப்பிடும் போது சாப்பிடுவது இல்லை. இப்படி எந்த வேலை செய்தாலும் அந்த வேலையை முழுமையாகச் செய்வதில்லை. முழுமையான மன ஒன்றுதல் இல்லாமல் இருப்பதால் மட்டுமே நிறைவான செயல்கள் நம்மிடம் இல்லை. இதற்காகத் தான் நாம் எல்லோருமே இன்று தியான வகுப்புகள் சென்று தியானத்தில் ஈடுபட்டு வருகிறோம். அதில் நல்ல முறையில் வெற்றியும் காண்கிறோம். தியானம் அனைத்தும் புற வாழ்விற்கான செயலுக்காக மட்டுமே இருந்துவிட்டால் எந்தப் பிரச்சனையும் இல்லை. மாறாக அதே தியானத்தைக் கொண்டு மனதை சீரமைப்பதற்கும் பயன்படுத்தும் போது தான் தவறு நிகழ்ந்துவிடுகிறது. இங்கு தான் நாம் புரிந்து கொள்ளவேண்டியது மிகவும் முக்கியமாக உள்ளது. மனதால் மனதை சீரமைக்க முடியாது. அதே மனதால் புறக்காரியங்களைச் சிறப்பாகச் செய்வதற்கான திட்டங்களை உருவாக்க முடியும்.

நமது மனம் அகம், புறம் என்று இரண்டு வகையில் செயல்படுகிறது. புறம் என்பது முழுவதுமாகச் செயல்களினால் ஆனது. நாமாக நமது மனதைத் தூண்டி எல்லா புற வேலைகளையும் சிறப்பாகச் செய்து வாழ்வில் உயர்வடைய வேண்டும். அகத்தைப் பொறுத்த வரையில் அது, நாம் கை வைக்க முடியாத இடம். நமக்கு ஏற்படும் எண்ணங்கள், உணர்வுகள் என எல்லாம் தாமாக வருபவை. அவை வந்த பின்புதான் நமது கவனத்திற்கு வந்ததே தெரிகின்றது. முடிந்த நிலையில் மட்டுமே நமது எண்ணமும் உணர்வும் நம்மால் உணரமுடிகிறது. முடிந்த நிலையில் உள்ள எண்ணங்களையும் உணர்வுகளையும் தான் நாம் நமக்கே ஏற்பட்ட எண்ணங்களாகவும், உணர்வுகளாகவும் நினைத்துக் கொண்டு வாழ்க்கை முழுவதும் போராடிக்கொண்டு இருக்கிறோம். நமக்கு, அடுத்தது இந்த எண்ணம் தான் வரும். இந்த உணர்வு தான் வரும் என்று எவரும் கூற முடியாது. எண்ணமும், உணர்வும் தோன்றிய பின்பு தான் நமக்கு இப்படி ஓர் எண்ணம், உணர்வு வந்துள்ளது என்பதே நமக்குத் தெரிகிறது. இப்படித் தோன்றி மறையும் எண்ணங்கள், உணர்வுகளின் ஆயுள் வெறும் 1/2 வினாடி மட்டுமே. நாமாகத் தான், முடிந்த நிலையில் உள்ள உணர்வுகளையும், எண்ணங்களையும் நமக்கு இப்படி ஏற்படலாமா எனப் போராடி 1/2 வினாடியில் மறைய வேண்டிய உணர்வையும், எண்ணத்தையும் அவரவர் இயல்புக்கு ஏற்றபடி எவ்வளவு நேரம் நீடித்துப் போராட முடியுமோ, அவ்வளவு நேரம் போராடி எல்லா மனத்துயரத்தையும் அடைந்து, உடல்நிலை பாதிப்படைந்து என்ன செய்வது என தெரியாமல் கடும் குழப்பத்திற்கு ஆளாகிறோம்.

மனதை சீரமைப்பதற்கு எந்தத் தியானமும் உதவாது. மனம் அதுவாக இயங்குவது. மேலும் நமது மனதின் சுயகட்டளையோ, பிரார்த்தனையோ, தியான பயிற்சிமுறையோ, பிராணாயாமமோ, ஆன்மீகம் சம்பந்தமான எந்தப் பயிற்சி முயற்சிகளோ, மனதை சீரமைக்க உதவாது. மேற்கூறிய அனைத்தும் உடல் நலத்திற்காகவும் புறச்செயலுக்காகவும் இருந்தால் எந்தத் தவறுமில்லை.

தியானம் என்பது புறவாழ்விற்குத் தேவை! அகத்திற்கு அல்ல என்பதைப் புரிந்து செயல்பட்டால், தியானமும் சிறப்படையும், வாழ்வும் உயரும், அகமும் விடுதலை அடையும்.

நம்மால் அகத்தில் எதுவுமே செய்யமுடியாது என்பதால் ஏற்படுவது அகவிடுதலை. புறத்தில் எல்லாமே நாமாகத் தான் செய்யவேண்டும். செயலை தியானமாக செய்வதால் ஏற்படுவது கர்மயோகம்.

அகத்திற்கும், புறத்திற்கும் நம்மிடம் இருக்கும் ஒரே சக்தி தான் செலவு ஆகிறது. மனதைச் சீரமைக்க எதுவுமே செய்ய முடியாது என்பதை புரிந்து கொண்டதனால் அகப்போராட்டத்திற்குச் செலவான சக்தி, இப்போது புறச்செயலுக்கு மாற்றமடைகிறது. இதனால் புறச்செயலில் ஒழுக்கமும், முழுமையும், நிறைவும் ஏற்படுகிறது.

**புரிதலுக்கு முன்**

1. 50% சக்தி அகப்போராட்டத்திற்குச் செலவு. போராட்டத்தால் அமைதி இன்மை.

2. 50% சக்தி மட்டுமே புறச்செயலுக்குச் செலவு. முழுமையான ஆற்றலுடன் செயல்படமுடியவில்லை. புறச்செயலில் முழுமையும், நிறைவும் இல்லை.




**புரிதலுக்கு பின்**

1.அகப்போராட்டம் மிகவும் குறைவு. நாம் செய்வதற்கு எதுவுமில்லை என்பதால் அமைதி தானாக ஏற்படுகிறது?

2. முழு ஆற்றலும் பயன்படுத்தப்படுகிறது. புறச்செயலில் நம்மால் எவ்வளவு ஈடுபாடுடன் செயல்படமுடியுமோ அவ்வளவு ஈடுபாட்டுடன் செய்து நிறைவு பெறுவது




திரு. V.A. P. சரவணன்
சேலம்.
செல் : 9994205880

## ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் இந்தச் சக பயணியின் வணக்கம்.

சென்ற மாதத்தில் ஐயாவின் சிறப்புரைகள் கோவில்பட்டி, நாகர்கோயில் அறிவுத்திருக்கோயில்களிலும் சென்னை திருமுல்லைவாயில், பெங்களூர், கிருஷ்ணகிரி மற்றும் சேலம் அம்மாப்பேட்டை அறிவுத்திருக்கோயிலிலும் மிகச் சிறப்பாக நடைபெற்றன. பெங்களூரில் நடைபெற்ற ஆங்கில உரை அனைவரையும் கவர்ந்தது. தேடுதல் கொண்ட அன்பர்கள் பலரும் கலந்து பயனடைந்தனர். இதை ஏற்பாடு செய்திருந்த திரு. சம்பத்குமார் அவர்கள், இன்னும் ஒரு நான்கு மாதத்திற்குள் ஒரு பெரிய பொதுக்கூட்டம் ஏற்பாடு செய்யப் போவதாக, தன் ஆர்வத்தைத் தெரிவித்திருக்கிறார். இது உண்மையிலேயே மிகப்பெரிய சமுதாயத் தொண்டுதான். ஐயாவால் தெளிவடைந்தவர்கள் நிறைய இருக்கிறார்கள். பொதுவாக, அதில் பலர் தங்களை வெளிக்காட்டிக் கொள்வதில்லை. அவர்களும் இதுபோன்ற நற்காரியங்கள் செய்வதற்கு முன்வரவேண்டும்.

இது தங்களை வெளிப்படுத்துவதற்காக அல்ல. தங்களைப் போன்று மற்றவர்களும் தெளிவடையவேண்டும் என்பதற்காக. இது மற்றவர்களைத் திருத்தும் முயற்சியோ அல்லது ஞானத்தெளிவைக் கொடுக்கும் முயற்சியோ அல்ல. அவ்வாறு கொடுக்கவும் இயலாது. அவரவர்கள் தாம், திறந்த மனத்துடன் அணுகித் தெரிந்து கொள்ளவேண்டும். ஆனால் இப்படி ஓர் உண்மை, எளிமையாக இருக்கிறது என்பதைத் தெரிவிப்பதற்குத் தெளிந்தவர்களும், ஆர்வலர்களும் முன்வரவேண்டும். ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள், தனக்கு ஏற்பட்ட தெளிவை வெளிக்காட்டாமல் தன்னோடு மட்டும் வைத்திருந்தால், அவர்பெற்ற தெளிவால் யாருக்கும் பயன் இல்லாமல் போயிருக்கும். அவர் நம் அனைவருடனும் பகிர்ந்து கொண்டதாலேயே, இந்த உண்மையைத் தரிசிக்கும் வாய்ப்பு நம்மில் பலருக்கும் கிடைத்திருக்கிறது.

நமது அக உலகம் அதன்போக்கில் இயங்கும் இயக்கம், அங்கு சீர்படுத்தும் முயற்சிகள் அனைத்தும் தேவையற்ற சுய முரண்பாடே. ஆனால் புறம் அப்படி அல்ல. நாம் நம்முடைய முயற்சியால் சீர்படுத்தவேண்டிய விஷயங்கள் நிறைய இருக்கின்றன. அது நம் அனைவரின் கடமையும்கூட. இது கர்ம பூமி, நாம் நம் நற்செயல்களாலேயே சமுதாயத்தைச் சீர்படுத்தி உயர்த்த முடியும். அந்த வகையில் ஐயாவின் ஞானத்தெளிவை தேடுதல் கொண்ட அனைவருக்கும் தெரிவிப்பதும் ஒரு சிறந்த சேவையாகும். எனவே தெளிந்தவர்களும், தெளிவடைய ஆர்வம் கொண்டவர்களும் ஒன்றிணைவோம் என வேண்டிக் கேட்டுக்கொள்கிறேன். ஆர்வம் கொண்ட அனைவரும் தங்கள் பெயர், ஊர் மற்றும் தொடர்பு எண்(Cell No.) ஆகியவற்றை SMS மூலம் 9789165555 என்ற எண்ணிற்குத் தெரியபடுத்துங்கள். இது நாம் இணைந்து செயல்படுவதற்கு மிகவும் உதவியாக இருக்கும்.

K.S. ஜீவமணி, ஆசிரியர்,
செல் : 97891-65555

# ஜென்கதை

## "கவலைக்கு மருந்து"

அரசன் ஒருவன் அவனுடைய நாட்டில் சிறந்த முறையில் செங்கோலாட்சி நடத்தி வந்தான். அந்நாட்டு மக்கள் அவனுடைய ஆட்சியில் மகிழ்ச்சியுடனும் சுபிக்ஷமாகவும் வாழ்ந்துவந்தார்கள். அந்த அரசன் தன் மனைவியின் மீது அளவுகடந்த அன்பு வைத்திருந்தான். ஒருநாள் எதிர்பாராத விதமாக அவன் மனைவி நோய்வாய்ப்பட்டு இறந்து விட்டாள். அவளுடைய இழப்பை அரசனால் தாங்கமுடியவில்லை. மிகுந்த துக்கமடைந்தான். மன அமைதியை இழந்தான். அதனால் அரசாட்சியிலிருந்து அவனது கவனம் சிதறியது. மற்றவர்களால் ஆட்சியில் குழப்பமும், சிக்கலும் ஏற்பட்டன. சரியான ஆட்சியின்மையின் காரணமாக மக்கள் அவதிக்குள்ளானார்கள். இவ்விசயத்தை கேள்விப்பட்ட அரசன் மிகுந்த மனவேதனை அடைந்தான். மனைவியை இழந்த கவலையைப் போக்க முடியவில்லை, சரியான ஆட்சியையும் நடத்தமுடியவில்லையே என்று தன்மீதே வெறுப்படைந்தான். சதா குழப்பத்திலேயே இருந்ததால் தூக்கத்தையும் இழந்தான். எவ்வாறாவது தன் மனவேதனையில் இருந்து மீளவேண்டும் என பெரும் முயற்சி செய்தான். ஆனால் முயற்சிகள் அனைத்தும் தோல்வியிலேயே முடிந்தன.

வேறு வழியில்லாமல் தன் மனவேதனையைப் போக்க அரண்மனை மருத்துவர்களை அழைத்து ஆலோசனை செய்தான். ஒவ்வொருவரும் ஒவ்வொருவிதமான ஆலோசனையும், மருந்தையும் கொடுத்தனர். அனைத்தையும் முயற்சித்துப் பார்த்தான். ஆனால் எதுவும் பயன்தரவில்லை. நாளுக்குநாள் கவலையும் மனவேதனையும் அதிகரித்ததே தவிர குறைந்தபாடில்லை. எனவே தனக்கு சரியான தீர்வைத் தராத மருத்துவர்களை திறமையற்றவர்களாகக் கருதி அனைவரையும் சிறையில் அடைத்தான். இறுதியில் ஓர் அறிவிப்பையும் அறிவித்தான். "தன் மனவேதனையையும் துக்கத்தையும் போக்க வல்லவர்களுக்குத் தன் ராஜ்ஜியத்தில் பாதி தருவதாகவும், அவ்வாறு முயற்சித்து முடியாதவர்களுக்குச் சிறைத்தண்டனை கிடைக்கும்" என்பதையும் எச்சரித்தான். இந்த எச்சரிக்கையால் அந்நாட்டு மருத்துவர்கள் எவரும் சிறைத் தண்டைனைக்குப் பயந்து, அரசருக்கு மருத்துவம் செய்ய முன்வரவில்லை. இந்நிலை நீடித்ததால் நாட்டின் நிர்வாகம் மிகவும் மோசமடைந்துவிட்டது.

அந்நாட்டின் எல்லையில் மிகுந்த சாந்த குணமுள்ள ஓர் ஞானி இருந்தார். அவர் ஞானி என்பது எவருக்கும் தெரியாமல் இருந்தது. இவ்விசயம் அவர் காதுக்கு எட்டியது. நாட்டின் நலனையும், அரசனின் நிலையையும் கருத்தில்கொண்டு அரண்மனையை நோக்கிப்புறப்பட்டார். தன்னை ஒரு மருத்துவன் எனவும் அரசனின் மனவேதனையைப் போக்கவல்ல மருந்து தன்வசம் இருப்பதாகவும் கூறி அரசனைச் சந்திக்க அனுமதி கேட்டார். இதைக்கேள்விப்பட்ட அரசன், "சிறைதண்டனைக்குப் பயந்து யாரும் முன்வராத நிலையில், ஒருவர் வந்திருக்கிறார் என்றால், அவர் ஒரு சிறந்த மருத்துவராகத்தான் இருக்கவேண்டும். எனவே இவராலாவது நமக்குத் தீர்வு கிடைக்காதா?" என்ற ஏக்கத்தோடும் ஆவலோடும் அவரை அழைத்து வரச்சொன்னான்.

அரசனை சந்தித்த ஞானி சற்றுநேரம் அவனது முகத்தையே அமைதியாக உற்று நோக்கினார். பிறகு "தங்கள் மன வேதனைக்கும் அமைதியன்மைக்கும் என்ன காரணம்?" எனக் கேட்டார். அரசன் "என் மனைவியின் இறப்பு தாங்கமுடியாத துயரத்தையும் மனவேதனையையும் தருகிறது. என் மன அமைதியை இழந்ததால் நாட்டை சரியாக ஆட்சி செய்ய முடியவில்லை. இதனால் நாட்டு மக்களின் துன்பத்திற்கும் காரணமாகி விட்டேன். இப்போது என் மன வேதனையையும் கவலையையும் போக்குவதற்காக எவ்வளவோ முயற்சித்தும் முடியவில்லை. அமைதியின்மையால் அவதிப்படுகிறேன். தாங்கள்தான் எப்படியாவது என்னைக் காப்பாற்ற வேண்டும்" என வேண்டினான்.

ஞானியும் தான் கொண்டுவந்த மருந்து கசாயத்தைக் கொடுத்து "இதை தாங்கள் காலை உணவுக்கு முன் உள்ளங்கையில் ஊற்றி அருந்தவேண்டும், இவ்வாறு மூன்று நாட்கள் சாப்பிட்டால் உங்கள் மனவேதனை மறைந்துவிடும்" எனக் கூறினார். அரசனும் அதை அமிர்தமாகவே கருதி நாளை காலையே தொடங்குவதாகக் கூறினான். ஞானியும் "சரி, ஆனால் ஒரு நிபந்தனை, இம்மருந்தை அருந்தும் முன் நீங்கள் கண்டிப்பாகக் குரங்கைப்பற்றி நினைக்கக்கூடாது" என்று கூறினார். அரசன் "எனக்குக் குரங்கைப் பற்றி நினைக்கும் பழக்கம் எதுவும் இல்லை. இதைப்பற்றி தாங்கள் சொல்லவேண்டிய அவசியம் இல்லையே" என்று கேட்டான். ஞானியும் "உங்களுக்குப் பழக்கம் இருக்கிறதோ இல்லையோ அம்மருந்தை கொடுக்கும் முன் இந்நிபந்தனையைச் சொல்லிக் கொடுத்தால்தான் மருந்து சரியாக வேலைசெய்யும் எனக் குறிப்பு சொல்லப்பட்டுள்ளது. எனவே நிபந்தனையையும் சொல்லிவிட்டேன்" என்றார்.

அரசனும் "குரங்கைப் பற்றி நினைக்கும் பழக்கம் எனக்கு எதுவுமில்லை. எனவே இது எனக்கு ஒரு பிரச்சினையே அல்ல" எனக் கூறி, மேலும் "நான் மூன்று நாட்கள் மருந்து அருந்தி மனவேதனை சரியாகும் வரை தாங்கள் அரண்மனையிலேயே தங்கி ஓய்வு எடுத்துக்கொள்ளுங்கள். தாங்கள் கூறியபடி மருந்து அருந்தியும் சரியாகவில்லை என்றால் தாங்கள் சிறைக்குச் செல்லவேண்டிவரும்" என்பதையும் கூறி ஞானியை விருந்தினர் தங்கும் மாளிகைக்கு அனுப்பிவைத்தான்.

ஞானியும் இனி நடக்கப்போவதை நினைத்து புன்முறுவலோடு அங்கிருந்து சென்றார். அடுத்தநாள் காலை அரசர் மருந்து அருந்தப் போகும் ஆவலுடன் குளித்து இறைவனை வணங்கி மருந்து கசாயத்தை உள்ளங்கையில் ஊற்றி அருந்துவதற்காக வாய் அருகே கொண்டுசென்றார். உடனே ஞானி சொல்லிய நிபந்தனை ஞாபகத்திற்கு வந்தது; குரங்கை நினைக்கக்கூடாது என்பது நினைவுக்கு வந்தது. "ஐய்யய்யோ குரங்கை நினைக்கக்கூடாது என்று நினைத்துவிட்டேனே, மருந்து அருந்தமுடியாதே" என்ற வருத்ததுடன் "சரி நாளை வெகு கவனமாகக் குரங்கை நினைக்காமல் மருந்து சாப்பிடலாம்" என்ற எண்ணத்துடன் மருந்து அருந்தாமலே உணவு உட்கொண்டான்.

அடுத்தநாள் வந்தது. காலை எழுந்தது முதல் குளித்து இறைவனை வணங்கும் வரை "குரங்கைப்பற்றி நினைக்கக்கூடாது.... குரங்கைப்பற்றி நினைக்கக்கூடாது..." என தனக்குத்தானே

## ஜென்கதை "கவலைக்கு மருந்து"

கூறிக்கொண்டான். பிறகு உணவு உண்ண அமர்ந்து மருந்து கஷாயத்தை உள்ளங்கையில் ஊற்றும் முன்னரே 'குரங்கை நினைக்கக்கூடாது' என்று குரங்கின் நினைவு வந்தது. இது மனவேதனையைவிட பெரும் பிரச்சினையாக இருந்தது. என்னசெய்வது என்று தெரியாமல் மருந்தை அருந்தாமல் வெறும் உணவை மட்டும் சாப்பிட்டான். இப்படியாகவே மருந்தை அருந்தாமலேயே மூன்று நாட்களும் கழிந்தன.

நான்காம் நாள் மருத்துவராக வந்த ஞானி அரசனைச் சந்தித்து "என்ன அரசரே, மருந்தை உட்கொண்டீர்களா? மனக்கவலை தீர்ந்ததா?" என அமைதியாகக் கேட்டார். உடனே அரசன் "ஐயா, தாங்கள் என்னை மருந்தை அருந்த முடியாதபடி சூட்சுமமாக சூழ்ச்சி செய்து விட்டீர்கள். நிபந்தனையைச் சொல்லி, சிக்கலை உண்டாக்கி விட்டீர்களே! நிபந்தனையைச் சொல்லாமல் இருந்திருந்தால் குரங்கை நினைக்காமல் இருந்திருப்பேனே. இப்போது மருந்தையும் உட்கொள்ள முடியவில்லை, மனக்கவலையையும் தீர்க்க முடியவில்லை . என்ன செய்வேன்!" என பரிதாபமாகக் கேட்டான்.

ஞானியோ "நிபந்தனையைச் சொல்லித்தான் மருந்து கொடுக்கவேண்டும் என்பது விதிமுறை, அதைத்தான் செய்தேன்" என்றார். மேலும், "தாங்கள் என்னிடம் குரங்கை நினைக்காமல் மருந்தை எப்படி சாப்பிடுவது என கேட்டிருந்தால் நானே சொல்லியிருப்பேனே. அது மிகவும் எளிதாயிற்றே" எனக்கூறினார். அரசனுக்குத் தலை சுற்றியது. "ஐயா முதலில் அதைச் சொல்லுங்கள், மிகவும் புண்ணியமாக இருக்கட்டும். மூன்று நாட்களாக பட்டபாடு எனக்குத்தான் தெரியும்" என ஞானியின் காலில் விழுந்து வேண்டிக் கேட்டுக்கொண்டான்.

ஞானியும் அரசனிடம் அது எவ்வாறு என்பதை பொறுமையாக விளக்கமாகக் கூறினார். அது அரசனுக்கு ஞானத் தெளிவை கொடுக்கும் விளக்கமாகவே அமைந்தது. அதனால் மனம் திருப்தி அடைந்து எந்தச் சஞ்சலமும் இல்லாமல் மருந்து உட்கொண்டு மனத்தெளிவு பெற்றான். ஞானியிடம் பெற்ற விளக்கத்தால் தானும் ஓர் ஞானியாகவே மாறிவிட்டான். ஞானியைத் தன் குருவாகவும் ஏற்றுக்கொண்டான்.

மனப்போராட்டத்தில் இருந்து விடுபட்டு தன் சிறந்த செயலால் நாட்டில் நல்லாட்சி செய்து வந்தான். அரசன் திருப்தி அடைந்து ஏற்றுக்கொள்ளுமாறு ஞானி என்ன சொல்லியிருப்பார்?

இது மனத்துயரமும் கவலைகளும் உள்ள அனைவருக்கும் பொருத்தமானதாகத்தான் இருக்கும்.

சிந்தியுங்கள் .....

ஞானியின் விளக்கத்தை அடுத்தமாதம் பார்ப்போம்.....



ஞானி என்ன சொன்னார்? அடுத்த மாதம்...

நன்கொடை சந்தா செலுத்த விரும்புபவர்கள், ரூ.100/-க்கான சேலத்தில் செல்லத்தக்க Cheque/DD/MO-வை SRI BAGAVATH MISSION என்ற பெயருக்கு எடுத்து கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

31, இராமலிங்கசாமி தெரு, அம்மாபேட்டை, சேலம் - 636 003. தமிழ்நாடு, இந்தியா. தொடர்புக்கு : 97891 65555, 99942 05880.

**Book packet** containing printed books

To

*If undelivered please return to:*




**SRI BAGAVATH MISSION**
31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.
**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891-65555**
www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Sri Jayavel Press, Gandhi Maidanam, Ammapet, Salem636 003. Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555.